# ஆக. 2-ல் அற போராட்டம்

—:—

## மதுரையில் 10000 பேர் திரளுகின்றனர்

—:—

# எங்கும் தலைவர்கள் விடுதலை கிளர்ச்சி


# தீக்கதிர்

கம்யூனிஸ்டு வார ஏடு

ஆசிரியர்: என். சங்கரய்யா

கதிர் 2] 11-7-65 10 காசுகள் [மலர் 42


தமிழகத்தில் விடுதலை இயக்கம் காட்டு தீ போல் பரவிட்டது ஆகஸ்ட் 2ம் தேதி அறப் போரில் கம்யூனிஸ்டுகள் குதிக்கிருர்கள். புதிய வரலாறு படைக்கிருர்கள். கம்யூனிஸ்ட்டுகள் வென்றே தீருவார்கள் அல்லது வீரர்களாக மடிவார்கள். சிவராமன், இரணியன். மாரி பாலு, மணவாளன், களப்பால் குப்பு வழியில் வந்தவர்கள் நாம்.

எம் தலைவர்களின் விடுதலையைப் பெற்றே தீருவோம் ஓய மாட்டோம், ஒளிய மாட்டோம். கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்த அன்றே எம் உயிர் கட்சிக்குத் தான் எம்மை ஆளாக்கியது கம்யூனிஸ்ட் கட்சி, எம் எண்ணமெல்லாம் கட்சியே. எம் இதயத்தைப் பிளந்து பார்த்தாலும் தெரிவது கட்சியே.

உருக்குக் கோட்டையில் மோதுகிருர் நந்தா. அவர் மண்டைதான் உடையும், கம்யூனிஸ்ட் கட்சி உடையாது. இது தான் வரலாறு,

மீரண்டு ஓடுவதற்குச் சோற்று பட்டாளத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல கம்யூனிஸ்டுகள். முன்னணியில் உள்ளவர்களைப் பிடித்துப் போட்டு விட்டால் அந்த இடத்துக்கு தோழர்கள் வந்து கொண்டே தான் இருப்பார்கள். எங்களையெல்லாம் சிறைசாலையில் பிடித்துப் போட இடமுண்டா? எத்தனை நாளைக்கு அடைத்து வைப்பார்கள்? மக்கள் பொறுத்துக் கொண்டேயிருப்பார்களா?

தலைவர்கள் வெளிவரும்வரை அறப்போர் நிற்காது. இதில் எந்த ரூபத்திலாவது கலந்து கொள்ளாத கம்யூனிஸ்ட் இருக்க மாட்டான். தலைவர்கள் விடுதலையை வற்புறுத்தி ஆயிரம் ஆயிரம் கையெழுத்துக்கள் வாங்கி விட்டோம். ஊர்தோறும் கூட்டங்கள், ஊர்வலங்கள் பதிணுயிரக் கணக்கான மக்கள் எங்களுக்கு ஆதரவளிக்கிருர்கள். நந்தா சொந்த ஊரான அகமதாபத்திலேயே காங்கிரசுக்குக் கல்லறை வைத்தாகி விட்டது.

லண்டனில் மட்டும் பிரதமர் சாஸ்திரி முன் அவசர காலச் சட்டத்தை வாபஸ்பெற கோரி ஆர்ப்பாட்டம். நடைபெறவில்லை கல்கத்தாவில் 10 ஆயிரம் பேர் ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. வெள்ளையரை எதிர்த்து நடைபெற்ற சுதந்திரப் போராட்ட காலத்திலிருந்து இன்று வரை மதுரை கல்கத்தாவுக்கு இணையாக நின்றிருப்பது நாடறிந்த வரலாறு தான். ஆக. 2ம் தேதி மாலை 4மணிக்கு மதுரை கலெக்டர் அலுவலகமே – நெஞ்சிலே உறுதியும் கரத்திலே செங்கொடியும் கண்களிலே ஒளியும் நடையிலே மிடுக்கும் கொண்ட வீரர்கள் முழக்கத்தில் அதிரப் போவது திண்ணம்.

மதுரை மாவட்டத்தின் சகல பகுதிகளில் இருந்தும் தோழர்கள் சைக்கிள்களில் வழிநெடுக பிரச்சாரம் செய்து கொண்டே வருகிருர்கள். மதுரை உள்ளளவும் மறக்க முடியாத நிகழ்ச்சியை உருவாக்க தோழர்கள் எக்காள மிட்டுக் கொண்டு வருகிருர்கள் — சபதமேற்று கொண்டு வருகிருர்கள் — கம்யூனிஸ்டுகள் சபதமேற்ருல்...

### தஞ்சையில்

தஞ்சை மாவட்டத்தில் கம்யூனிஸ்டுகள் தனிச் சிறப்பு வாய்ந்த வரலாற்றை உருவாக்கியுள்ளார்கள் அல்லவா? வீரம் செறிந்த விவசாயிகள் போராட்டம் எத்தனை எத்தனை? அந்த விவசாயிகள் தலைவர்களை விடுவிக்க கங்கணம் கட்டிக் கொண்டு விட்டார்கள். பட்டி தொட்டிகள் எல்லாம் இயக்கம் பரவிவிட்டது.

தஞ்சை நகரில் ஆக. 2ம் தேதி ஆர்ப்பாட்டத்துக்கு முன்னேடியாக ஜூன் 27ம் தேதி கும்பகோணத்தில் தோழர் ரெத்தினம் தலைமையிலும் ஜூன் 29ம் தேதி மேல வாழக்கரையில் தோழர் சி. சுப்பிரமணியம் தலைமையிலும் சாட்டியகுடியல் தோழர் பி. காத்தையன் தலைமையிலும் மாபெரும் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றுள்ளன.

மற்றும் மாவட்டமெங்கும் எண்ணற்ற கூட்டங்களில் மாவட்டச் செயலாளர் தோழர் ஏ. நடராசன் விடுதலை இயக்கத்துக்கான தயாரிப்புகளை விளக்கினுர். ஊர்தோறும் ஊர்வலங்களில் நூற்றுக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். தீர்மானங்கள் நிறைவேற்றி மந்திரி நந்தாவுக்கும் அனுப்பப்பட்டுள்ளது.

### பெருந்துறை

பெருந்துறை பகுதியிலும் இயக்கம் தீவிரமடைந்துள்ளது. மேட்டுவ பாளையத்தில் ஜூன் 22-ம் தேதி திரு மாரப்ப கவுண்டர் தலைமையில் மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது. ஜூன் 23ம் தேதி திங்களூரில் தோழர் ஈ. காளியண்ணன் தலைமையில் தோழர்கள் எம். ஜோதி நாத், திருப்பூர் தமிழரசு விடுதலை இயக்கத்தை பற்றி விளக்கினுர்கள். பாவலர் வரதராஜன் இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

தலைவர்கள் விடுதலை இயக்கத்தையொட்டி சத்திரபட்டியில் ஜூன் 22ம் தேதிக் கூட்டத்தில் தோழர் ரஜாக் பேசினுர். அத்திகோம்பையில் தோழர் எஸ். பழனியப்ப கவுண்டர் தலைமையில் ஆர். குள்ளப்பன் பேசினுர் நாச்சியப்பக் கவுண்டன் வலசில் தோழர் செல்லமுத்து தலைமையில் தோழர்கள் மணிவேல், டி. ஷண்முகம் பேசினர். இம் மூன்று ஊர்களிலும் காளிமுத்து குழுவினர் பாட்டு கச்சேரியும் நடைபெற்றது. காவேரி பாக்கம் முதலிய ஊர்களிலும் பொது கூட்டங்கள் நடைபெற்றன.

8-மைல் ஊர்வலம்

# கல்கத்தா சிறையில் 10 ஆயிரம்பேர் முற்றுகை

—:—

### உள்ளேயிருந்தவர் கோஷம் போட்டு தீப்பந்தம் காட்டினர்

கம்யூனிஸ்ட் தலைவர்களையும் தீவிர ஊழியர்களையும் விடுதலை செய்யக் கோரி சமீப காலத்தில் கல்கத்தாவில் கண்டறியாத மாபெரும் ஊர்வலம் ஒன்று ஜூன் 26-ம் தேதி முக்கிய வீதிகள் வழியாக 8 மைல் தூரம் வந்து டம்டம் மத்திய சிறை சாலை கதவுகளைத் தட்டியது.

பல பாகங்களிலிருந்து ஆறுகள் போல் ஊர்வலம் புறப்பட்டு ஒரே ஜன சமுத்திரமாகக் காட்சி அளித்தது,

ஊர்வலம் தொடங்குததற்கு முன் தோழர் அப்துல் ஹகீம் எம், எல சி தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர் ஜோதிவாசு பேசினுர். தலைவர்களை விடுதலை செய்யக் கோரும் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றபட்டது.

கடைசி நிமிடத்தில் தான் கடிதம் போனதால் இவ்வூர்வலம் இடது சரரி கட்சிகளின் கூட்டணியாக மாற முடியாமல் போனதற்கு தோழர் ஜோதி பாசு வருத்தம் தெரிவித்தார், ஆனுல் இந்த இயக்கத்தில் சேர்வதாக! இடது சாரி கட்சிகள் தோழர் ஜோதி பாசுவுக்கு உறுதி கூறியுள்ளனர்.

(4-ம் பக்கம் பார்க்க)

# லண்டனில் சாஸ்திரிக்கு எதிராக ஆர்ப்பாட்டம்!

காமன்வெல்த் பிரதமர்கள் மாநாட்டில் கலந்து கொள்ள ஜூன் 17-ம் தேதி லண்டனில் மால்பரோ மாளிகைக்கு பிரதமர் சாஸ்திரி வந்தபோது அவருக்கு எதிராக பிரிட்டனில் வாழும் இந்தியர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர். அவசர கால நிலைமையை ரத்து செய்யக் கோரும் அட்டைகளை அவர்கள் ஏந்தியிருந்தனர்.

பிரிட்டனிலுள்ள இந்தியத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் திரு சாஸ்திரியிடம் சமர்ப்பிக்கப்பட்ட மகஜரில் சமாதான காலத்தில் மக்களை விசாரணையின்றி காலவரையில்லாமல் சிறையில் போடுவது ஜனநாயகத்துக்கு விரோதம் என்றும் எல்லா அரசியல் கைதிகளையும் விடுதலை செய்யுமாறும் கோரப்பட்டிருந்தது.

# தலையங்கம்

## அவசரகால நிலையில் காமராஜ் தினம்!

இந்திய-சீன எல்லையில் துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்டே 3-ஆண்டுகளாகியும் அவசர கால நிலைமையை இந்திய சர்க்கார் வாபஸ்பெற மறுக்கிறது. பாதுகாப்புச் சட்டம் ரத்து செய்யப்படுவதற்கு ராஜ்ய முதல் மந்திரிகள் சம்மதிக்கவில்லை என்று சமீபத்தில் அறிவிக்கப்பட்டது.

அவசர கால நிலைமை எதற்காக? யாருக்காக?

காங்கிரஸ் கட்சிக்கு ஆபத்து வந்தால் அது நாட்டுக்கு ஆபத்தாகுமா? காங்கிரஸ் கட்சியைக் காப்பாற்றதானே அவசர கால நிலைமைப் பிரகடனம்?

அவசர கால நிலைமை உணர்ச்சி கொஞ்சமாவது இருந்தால் இந்தியாவின் எல்லை ராஜ்யங்களான காஷ்மீர், பஞ்சாப், உ. பி. முதலியவற்றில் பதவிக்காக காங்கிரஸ் தலைவர்கள் குடுமிப்பிடிச் சண்டை போட்டுக் கொள்வார்களா என்று கேட்கிறோம்.

காங்கிரஸ்காரர்கள் அடிக்கும் கூத்தில் அவசரகால நிலைமையைப் பொதுமக்கள் கொஞ்சமாவது உணர முடிகிறதா?

அவசரகால நிலைமையில் நாட்டை கொள்ளை லாபக்காரர்களுக்கும், கள்ளமார்க்கெட்காரர்களும் வேட்டைக் காடாக்க முடியுமா என்று கேட்கிறோம். இன்று இந்தியாவில் எந்த இடத்திலாவது கள்ளமார்கெட்காரர்களும், கொள்ளை லாபக்காரர்களும் பாதுகாப்புக் கைதிகளாக உள்ளனரா?

அவசரகால நிலைமையில் மக்கள் துயரம் அதிகரித்துக் கொண்டே வந்திருப்பதையும் ஏகபோகவாதிகள் கொழுத்திருப்பதையும் மறுக்க முடியுமா?

ஏகாதிபத்திய நாடுகளான அமெரிக்கா, பிரிட்டன் கூட இந்திய வட எல்லையில் சண்டை மூளும் என்று நம்பவில்லை என்று தெரிவித்துள்ளதே. அவசரகால நிலைமையை நீடித்துக் கொண்டு போவதுதான் எல்லைப் பிரச்னைக்குப் பரிகாரமா?

அமைதியான காலத்தில் வேறெந்த நாட்டில் அரசாங்கம் அவசரகால நிலைமையை வைத்துக் கொண்டு காலமல்லாம் ஆட்சி நடத்துகிறது என்று கேட்கிறோம்.

பிரிட்டிஷ் சர்க்காரின் பாதுகாப்பு விதிகளை காங்கிரஸ் சர்க்கார் காப்பியடித்திருக்கிறதே யுத்த காலத்தில் அவசரகால நிலைமையில் பிரிட்டனில் ஒரு கட்சி ஆட்சிதான் இருந்ததா?

துறைமுகங்களும், விமான தளங்களும் எந்தப் பாதுகாப்பில் உள்ளன. வால் காட்டுகள் வந்து போவதிலிருந்தே அவசர கால உணர்ச்சி எவ்வளவு தூரத்துக்கு உள்ளது என்று புரிகிறதல்லவா?

பாதுகாப்பு நிதிக்காக எந்த மந்திரியாவது சம்பளத்தைக் குறைத்துக் கொண்டாரா?

ஆயிரக்கணக்கில் வாங்கும் அதிகாரிகளுக்கு சம்பள வெட்டுச் செய்யப்பட்டிருக்கிறதா? இதற்கெல்லாம் பதிலாக குறைந்த சம்பளம் வாங்குவோருக்குத்தான் விலைவாசி உயர்வை 100 சதவிகிதம் சரிக்கட்டும் ரீதியில் கிராக்கிப்படி கொடுக்கச் சர்க்கார் மறுக்கிறது.

மந்திரிகள் ஆடம்பரச் செலவுக்கும் குறைவில்லை. முதல் மந்திரி திரு. பக்தவத்சலத்துக்கு ரூ. 20 ஆயிரத்துக்கு மேல் விலையுள்ள உல்லாச கார் வாங்கப்பட்டிருக்கிறது. பாலம் திறக்கவும், கடைகள் திறக்கவும் மந்திரிகள் செல்வதற்குப் பொது பணத்தை விரயம் செய்கிறார்களே இதெல்லாம் பாதுகாப்புச் செலவுக்குப் பயன்படுமே!

நாட்டின் பாதுகாப்புக்கு கம்யூனிஸ்டுகள் ஒரு சிறு தடங்கலும் செய்யவில்லை; திருச்சி அருகே ஆயுதத் தொழிற்சாலை அமைக்கும் திட்டத்தைத் துரிதப்படுத்த வேண்டும் என்று தோழர் கே அனந்தன் நம்பியார் பார்லிமெண்டில் வாதாடினார். தோழர்கள் பி. ராமமூர்த்தி, ஏ. கே. கோபாலன் முதலிய கம்யூனிஸ்ட் எம்.பிகள் தங்கள் ஒரு மாதச் சம்பளத்தைப் பாதுகாப்பு நிதிக்குத் தந்தது எதைக் காட்டுகிறது?

ஆனால் நாட்டில் அவசரகால நிலைமை இருக்கிறது என்பதை அடியோடு மறந்திருப்பவர்களில் குறிப்பிடத் தக்கவர் திரு. காமராஜ் இவர் அடிக்கும் ஊதாரிச் செலவுக்கு அளவே இல்லை. துர்க்காப்பூர், ஜெய்ப்பூர், முதலிய இடங்களில் நடைபெற்ற காங்கிரஸ் கூட்டங்களுக்கு ஆன வீண் செலவுகளை பூர்ஷ்வா பத்திரிகைகளே கண்டித்தன.

பதவியை உதறுவதற்காக திட்டம் கொண்டுவந்தவர் இரண்டாம் முறையாகக் காங்கிரஸ் தலைவர் ஆவதற்கு கட்சித் தீர்மானமே திருத்தப்படுகிறது.

இவர் பிறந்த தினம் கொண்டாடப்படுவதற்கு ஆகும் செலவு சுதந்திர தின கொண்டாட்டத்துக்கு செலவாவதைப் போல் பல மடங்கு அதிகம். நேரு ஜெயந்திக்குப் போடாத அலங்கார வளைவுகளை காமராஜ் தினத்துக்கு பண மூட்டைகள் லட்சக்கணக்கில் செலவிட்டு அமைக்கிறார்கள். சென்ற வருடம் நேருஜி இறந்து சரியாக 2-மாதங்கள் ஆகவில்லை. அதற்குள் காமராஜ் பிறந்த தினத்தை சென்னையில் லட்சக்கணக்கில் செலவிட்டு கொண்டாடினார்கள். இதையெல்லாம்விட வெட்கக்கேடு தம் பிறந்த தினக் கொண்டாட்டத்தைப் பார்க்க திரு காமராஜ் சென்னைக்கே வந்துவிட்டார். ஊர்வலம் வரும்போது மவுண்ட்ரோடில் ஒரு உயரமான கட்டிடத்தின் மேலிருந்து பார்த்துப் பார்த்துப் புளகாங்கிதம் அடைந்தார். இந்த வீண் செலவெல்லாம் ஏன் இதையெல்லாம் பாதுகாப்பு நிதியில் சேர்க்கலாமே என்று ஒரு வார்த்தையாவது திரு காமராஜ் தன்னடக்கத்துடன் கூறவில்லை. ஒரு வாரம் கொண்டாட்டங்களில் எல்லாம் ஆசை தீரக் கலந்துக் கொண்டார்.

திரு காமராஜ் முதல் மந்திரியாவதற்கு முன் பிறந்த தின விழா கொண்டாடப்பட்டதா என்று கேட்கிறோம். அவர் முதல் மந்திரி பதவியில் இருக்கும் போது தானா சிலை திறப்பது? ஆனால் வெள்ளையனுக்கு வரி செலுத்த மறுத்து தூக்குக் கயிற்றில் தொங்கிய கட்டபொம்மன் போன்ற தேசபக்தர்களுக்கு 176-வருடங்களாக மக்கள் போடும் கற்குவியலைத் தவிர வேறு நினைவுச் சின்னம் கிடையாது.

இந்த வருடம் திருச்சியில் காமராஜ் தினத்தை அமர்க்களமாகக் கொண்டாடப் போகிறார்களாம், தவறாமல் காமராஜும் வந்து கலந்து கொள்ளுகிறார். அதிகாரத்தைத் துஷ்பிரயோகம் செய்து காமராஜ் விழா நடத்துவதுதான் மந்திரி திரு ராமையாவின் வேலையா என்று கேட்கிறோம். இதை நடத்த கட்சியில் ஆட்கள் கிடையாதா? மந்திரிகள் வரவேண்டுமா?

திருச்சியில் வளைவு ஒன்றுக்கு ரூ. 2500 செலவில் 63 வளைவுகள் போடுகிறார்களாம் அதன் வழியே ஊர்வலமாம். அதை திரு காமராஜ் பார்ப்பாராம் ரூ 11,500 செலவில் நிரந்தர வளைவு மேற்கு புலி வார்டு ரோடில் அமைக்கிறார்களாம். நாட்டில் அவசர கால நிலைமை இருக்கிறது என்று திரு காமராஜ் நம்புகிறாரா என்று கேட்கிறோம். இத்தொகையை எல்லையில் உயிரைத் திரணமதித்து நிற்கும் ஜவான்களுக்குச் செலவிட்டால் என்ன என்று கேட்கிறோம்.

திரு காமராஜுக்குத் தரப்படும் பணமுடிப்பைப் பாதுகாப்பு நிதிக்குக் கொடுப்பாரா என்று கேட்கிறோம். கணக்கு வருமா என்று கேட்கிறோர். இது ஏழை மக்கள் தரும் சிறு தொகையா பண மூட்டைகள் லஞ்சமா? பட்டியல் தரத் தயாரா?

டாங்கே கட்சி அராஜகம்

## கோதண்டராமனுக்கு சமூக பகிஷ்கார விதிப்பு!

திருத்துறை பூண்டி தாலுகா ஆலவலம் கிராமத்தில் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் எஸ். கோதண்டராமனுக்கு எதிராக டாங்கே கட்சியினர் கடந்த ஓராண்டாக ஜாதி வெறியைத் தூண்டி சமூகப் பகிஷ்காரம் செய்து வருகிறார்கள் இவ்வூரில் டாங்கே கட்சியினரே ஆதிக்கத்தில் உள்ளனர்.

இதன் படி அவருக்குக் கடைகளில் சாமான் கொடுக்கக் கூடாது, கூடிவரத் தொழிலாளி முடி வெட்டக் கூடாது. வண்ணார் துணி வெளுக்கக் கூடாது இன்றும் பல பல தோழர் கோதண்டராமன் வீட்டில் இறந்த மாட்டை அவரும், அவரது தம்பியும் மட்டுமே எடுத்துச் சென்று புதைத்தார்கள் என்றால் டாங்கே கட்சியினர் எவ்வளவு தூரத்துக்கு கம்யூனிஸ்ட் கட்சியினரைப் பழி தீர்க்க விரும்புகிறார்கள் என்று தெரிகிறதல்லவா?

மேலும் தோழர் கோதண்டராமனுடன் யாரும் பேசக் கூடாது என்றெல்லாம் தடை விதித்து வருகிறார்கள். சிலர் அவரை "வெட்டுவேன், குத்துவேன்" என்றெல்லாம் மிரட்டுகிறார்களாம்.

### அராஜகம்

மன்னார் குடி தாலுகாவில் பேரையூரில் தோழர் பி. மாரியப்பனைத் தாக்கி இரு கைகளையும் ஒடித்தார்கள்.

பனங்காட்டாங்குடி கிராமத்தில் விவசாயிகளைத் தெரு புகுந்து அடித்து இம்சித்தார்கள்.

பள்ளங்கோவில் கிராமத்திற்கு அரிவாள், கம்பு, ஈட்டி, கற்கள் எடுத்துக் கொண்டு சென்ற போது போலீசார் தடுத்த தாகக் கேள்வி

டாங்கே கட்சியினர் ஒரு சிலரின் தூண்டுதலால் தான் அராஜகம் கட்டுமீறி போவதாகத் தெரிகிறது.

தோழர் கோதண்டராமனுக்கு எதிராக விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடுகளை அகற்றி அவருக்குப் பாதுகாப்புக் கொடுக்க வேண்டியது சர்க்கார் பொறுப்பு.

### மார்க்ஸிஸ-லெனினிஸ நூல்களை கற்று

# உண்மை கம்யூனிஸ்ட் கட்சியை கட்டுவோம்

**கல்கத்தாவில் நடைபெற்ற 7-வது கட்சிக் காங்கிரஸில் அங்கீகரிக்கப்பட்ட அரசியல் ஸ்தாபன அறிக்கையின் கடைசிப் பகுதியை இங்கு பிரசுரிக்கிறோம்.**

மார்க்ஸிஸ - லெனினிஸக் கொள்கை அடியோடு புறக்கணிக்கப்பட்டது தான் திரிபுவாதம் வளர்வதற்கும் தன்னிச்சைப் போக்கு தலைதூக்குவதற்கும் முக்கிய காரணமாக இருந்தது.

1942-48 காலகட்டத்தில் "ஆக்கரீதியான மார்க்ஸிஸம்" என்ற பெயரால் மார்க்ஸிஸ-லெனினிஸப் போதனை நிராகரிக்கப்பட்டு அதற்குப் பதில் கட்சித் தலைவர்கள் எழுதிய நூல்களே புகுத்தப்பட்டன. இந்த "ஆக்க ரீதியான மார்க்ஸிஸம்" தான் மத அடிப்படையில் ஜின்னு வகுத்து இரு இனக் கொள்கையை நியாயப்படுத்தும் "முஸ்லீம் தேசிய இனக்" கொள்கையை உண்டாக்கிவிட்டது.

இந்த காலகட்டத்தில் மார்க்ஸிஸக் கொள்கையை ஒதுக்கும் அளவுக்கு அலட்சியம் ஏற்பட்டதால்தான் 'முஸ்லீம் தேசிய இனக்" கொள்கையை விமர்சனம் செய்யாமலேயே கட்சி ஏற்றுக் கொள்ள முடிந்தது.

அதையடுத்து 1948-51 கால கட்டத்தில் எல்லா மட்டங்களிலும் மார்க்ஸிஸம்-லெனினிஸத்தைப் புகட்டுவதற்கு முயற்சி மேற்கொள்ளப்பட்டது. ஆனால் அச்சமயம் மேற்கொள்ளப்பட்ட கொள்கை நிலை மிகவும் இடதுசாரி தன்னிச்சைப் போக்காக அமைந்துவிட்டதால் மீண்டும் கட்சி மார்க்ஸிஸ நூல்களைப் புறக்கணிக்கும்படியாயிற்று.

கட்சி மேற்கொள்ள வேண்டிய தலையாய பணிகளில் எல்லா மட்டங்களிலும் திட்டமிட்ட ரீதியில் மார்க்ஸிஸ நூல்களைக் கற்பிப்பதும் ஒன்றாகும். இதைச் செய்யாமல் கட்சி திரிபுவாதத்தை முறியடிப்பதோ தன்னிச்சைப் போக்குகள் தலை தூக்காமல் பார்த்துக் கொள்வதோ முடியாது.

திரிபுவாதமும், பூர்ஷ்வா தேசியமும் ஓங்கியுள்ள நிலையில் லெனினிச ஸ்தாபன கோட்பாடுகள் கைவிடப்பட்டன. 1948-51 கால கட்டத்தில் இடதுசாரி தன்னிச்சைப் போக்கால் கட்சிக்கு விழுந்த அடியில் கட்டுப்பாடு குலைய ஆரம்பித்தது. தன்னிச்சைப் போக்குக்கு எதிராகவும் நன்கு வளர இடமுள்ள திரிபுவாதப் பிசாசுக்கு எதிராகவும் கொள்கை ரீதியான போராட்டத்தின் அடிப்படையிலேயே கட்டுப்பாட்டை மீண்டும் கொண்டுவர முடியும்.

புரட்சிகரமான மார்க்ஸிஸக் கொள்கையிலும் அனுஷ்டானத்திலும் பிறக்கக்கூடிய உத்வேகம் இன்றி பார்லிமென்டரி, சட்டசபை, கூட்டுறவு துறைகளில் வேலைத் திட்டங்களே மேலோங்கியது சேர்ந்ததாலும் சுற்றிலும் சமூக, பொது வாழ்வில் ஊழல்கள் பெருகி வளர்ந்ததாலும் கம்யூனிஸ்ட் வாழ்க்கை நெறிகள் சிதறுண்டன. கண்டிப்பின்மை, சுகபோக வாழ்க்கை முதலிய பூர்ஷ்வா பழக்கங்களும், வாழ்க்கை முறையும் கட்சித் தோழர்களையும் குறிப்பாக உயர் மட்டங்களில் உள்ளவர்களையும் பற்ற தொடங்கியது. கட்சியின் பொறுப்புகளும், கடமைகளும் தட்டிக் கழிக்கப்பட்டன. கட்சி நலனைவிட தன்னலத்தையே மேலாகக் கருதும் மனோபாவம் வளர ஆரம்பித்தது

திரிபுவாதத்தைப் பின்பற்றும் போக்கிலும் முழுக்க முழுக்க முதலாளி வர்க்கத்துக்கு வால் பிடிக்கும் நிலையை கட்சி ஏற்கச் செய்யும் முயற்சியிலும் குறிப்பாக மேல் மட்டத்திலுள்ளவர்கள் அடியோடு மழுங்கிப் போனர்கள். தேசியக் கவுன்சிலிலும், மத்திய நிர்வாகக் கமிட்டியிலும், போலீட் பீரோவிலும் கூட பின்னர் செயற் குழுவிலும்கூட நடைபெற்ற விவாதங்கள் திட்டமிட்ட ரீதியில் வெளிப்படையான நோக்கத்துக்காக முதலாளி வர்க்கப் பத்திரிகைகளுக்கு வெளியிடப்பட்டன. இவ்விதம் கட்சியின் ஒரு பகுதி பகிரங்கமாக நிந்தனை செய்யப்பட்டது.

என்றாலும் ரகசியம் வெளிப்படுவதை விசாரணை செய்த கமிஷன் அறிக்கை நிறுத்தி வைக்கப்பட்டது, உள்ளங்கை நெலிக்கனி போன்ற சான்று காட்ட முடியாவிட்டாலும் உண்மையான குற்றவாளி யார் என்று தேசிய கவுன்சிலிலுள்ள ஒவ்வொருவரும் அறிந்திருந்தனர்.

செயற்குழு கூட்டம் ஒன்றில் ஒவ்வொரு உறுப்பினரும் அடுத்தவர் மீது குற்றம் சாட்டினர். 5-உறுப்பினர்கள் மட்டுமே கலந்து கொண்ட செயற்குழு கூட்டம் ஒன்றின் நடவடிக்கைகளும் வெளிப்பட்டு 24-மணி நேரத்துக்குள் முதலாளி வர்க்கப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டது. செயற்குழு உறுப்பினர்கள் மூவரில் ஒருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர்களிடமிருந்து தான் இது வெளிபட்டிருக்க வேண்டும் என்பதில் சந்தேகமில்லை.

இதற்கெல்லாம் பிறகு ரகசியம் வெளிப்படுவதற்கு முடிவு கட்டுமாறு அணிகளிடமிருந்து கோரிக்கைகள் வந்த பிறகும் கூட தேசியக் கவுன்சில் வாய் மூடிக் கிடந்தது. இந்த அளவுக்கு மழுங்கிப்போகும் நிலை ஏற்பட்டது. ஆகவே எல்லையில் சண்டைமூண்டதும் கட்சியில் ஒரு பகுதியினர் தகவல் கொடுப்பவர்களாக மாறியதில் ஆச்சரியம் எதுவும் இருக்க முடியுமா ?

திரிபுவாத நிலையைப் பின்பற்றாதவர்களைப் பற்றி கெட்ட பெயர் உண்டாக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. சகாக்களிடையே எவ்விதம் பரஸ்பர மரியாதை வளர முடியும்? இதற்குப் பதில் வெறுப்புதான் வளர்ந்தது. எனவே கம்யூனிஸ்ட் கட்சிக்கு இன்றியமையாததாகிய கூட்டுத் தலைமை ஏற்படவில்லை.

இதன் விளைவாக உள்கட்சி ஜனநாயகமும் ஜனநாயக மத்திமமும் ஏற்படவில்லை, கட்சிக்குள் பிரிவினை எண்ணங்கள் வளர்ந்து அனுஷ்டானத்திலும் தலை தூக்கின. உள்கட்சி ஜனநாயகம் இல்லாமல் போனதை 1957-ம் வருட 12 கட்சிகள் தஸ்தாவேஜு அல்லது 1960ம் வருட மாஸ்கோ அறிக்கை ஆகியவற்றை பற்றிகூட விவாதத்துக்கு ஏற்பாடு செய்யப்படாததிலிருந்து காணலாம்.

உள்கட்கி ஜனநாயகம் இல்லாததால் அதன் விளைவாக கட்டுப்பாடின்றி பேசுவதும் தலை தூக்கியது,

மார்க்ஸிஸத்துக்கு விரோதமான, பூர்ஷ்வா ஸ்தாபன முறைகள், தீங்குகள் இவற்றையெல்லாம் எதிர்த்து திட்டமிட்ட, விட்டுக் கொடுக்காத போராட்டம் நடத்தியாக வேண்டும். கட்சி நெறிகளை உறுதிப்படுத்தி துரிதமாகக் கூட்டுத் தலைமை ஏற்படும் முறையில் கட்சி வாழ்க்கையை அமைக்க வேண்டும்.

இந்தப் போராட்டங்கள் மூலம் மார்க்ஸிஸ-லெனினிஸக் கொள்கையில் உறுதியாக நிற்கும் - லெனினிச ஸ்தாபன விதிகளைப் பற்றி நிற்கும் - எந்த நிலைமைக்கும் ஏற்ற நீக்குப் போக்கான யுக்திகளைக் கையாளக்கூடிய உண்மையான, மக்களுடைய கம்யூனிஸ்ட் கட்சியைத் துரிதமாக நாம் காட்டியாக வேண்டும்.

தோழர்களே! நாட்டின் புறநிலை மிகவும் சாதகமாக உள்ளது. சீனாவுடன் எல்லைத் தகராறுக்குப் பின் குறிப்பாக 1962 அக்டோபர் - நவம்பர் எல்லைச் சண்டைக்குப் பின் நமக்கு எதிராக சர்க்காரும், மற்ற கட்சிகளும் பிரச்சாரப் பீரங்கிகளையும் அவதூறுகளையும் கட்டவிழ்த்து விட்டிருந்தாலும் இதில் திரிபுவாத டாங்கே கோஷ்டி தீவிர உதவி இருந்தாலும் நம்மை மக்களிடமிருந்து தனிமைப்படுத்துவதில் அவர்கள் வெற்றி பெற முடியவில்லை. இதற்கு மாறாக நாம் தான் மக்களுடைய நன்மைகளுக்காக விட்டுக் கொடுக்காமல் தன்னலமின்றி போராடுபவர்கள் என்று பெருவாரியான மக்கள் கண்டு வருகின்றனர்.

இதற்குக் காரணம் ஆளும் கட்சியின் கொள்கைகளும் மற்ற வலதுசாரி பிற்போக்கு, வகுப்புவாதக் கட்சிகளின் கொள்கைகளும் மக்களை நிரந்தரமான வறுமையிலேயே ஆழ்த்தும் என்பதை அனுபவம் பெருவாரியான மக்களுக்கு நாள்தோறும் உணர்த்திக் கொண்டு வருகிறது. இல்லாமையும், துயரமும் தேசத்தை படுநாசத்துக்குக் கொண்டு செல்லுகிறது.

திரிபுவாத டாங்கே கோஷ்டிகைக் கொண்டுள்ள முதலாளி வர்க்கத்துக்கு வால் பிடிக்கும் போக்கும் முதலாளித்துவ வளர்ச்சிப் பாதைக்குச் சிந்து பாடும் போக்கும் எந்த நிவாரணமும் அளிக்காது என்பதை அனுபவம் மக்களுக்குஉணர்த்தியுள்ளது.

இக்கட்சிகளின் கொள்கையற்ற போக்கை படிப்படியாக உணர்ந்துள்ளவர்களை ஒருமுகப்படுத்துவதற்கு ஒரே தடங்கலாக இருந்தது திரிபுவாதிகள் திட்டவட்டமாகக் கட்சியை வர்க்கச் சமரசப் பாதைக்கு அழைத்துச்செல்ல முயன்றதும் அதன் விளைவாக கட்சி பலவீனமுற்று தேக்கத்தில் சிக்கியதுமேயாகும்

கட்சியில் பெரும்பான்மையோர் திரிபுவாதிகளை சந்தேகமற நிராகரித்து மிகக் குறுகிய காலத்தில் இந்தக் காங்கிரசில் பிரதிநிதித்துவமாகியிருப்பது

(4ம் பக்கம் பார்க்க)

# திரிபுவாதிகள் எழுதிய நூல்களால் கட்சிக்கு நேர்ந்த கேடுகள்

# இயக்கச் செய்திகள்

## பீடித் தொழிலாளர் போராட்டம் வெற்றி!

வட ஆற்காடு ஜில்லாவில் பீடித் தொழிலாளர் போராட்டம் வெற்றி பெற்றது. சென்ற மாதம் 30-ம் தேதி கூட சமரசப் பேச்சில் 13 பைசாவுக்கு மேல் தர மறுத்த முதலாளிகள் சாதாரண பீடிகளுக்கு ரூ 1. 90ம் ஜாடி பீடிகளுக்கு ரூ 2. 25-ம் கூலி தர கடையில் ஒப்புக் கொண்டு லேபர் கமிஷனர் முன்பாக சமரசம் ஏற்பட்டது.

பீடித் தொழிலாளர் போராட்டத்தை அடக்க வட ஆற்காடு ஜில்லா முழுதிலும் கூட்டங்கள் நடத்த தடை விதிக்கப்பட்டது. வாணியம்பாடியில் ஜுலை 1-ம் தேதி போலீசார் ஊர்வலத்தைக் கலைக்க முயன்ற போது 13 தொழிலாளர்கள் ரத்தம் சிந்தினர் கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி உட்பட ஐந்து தோழர்கள் கைது செய்யப்பட்டனர்.

திருப்பத்தூர், ஜோலார் பேட்டை, வாணியம்பாடி, ஆம்பூர், ஆகிய இடங்களில் ஜுன் 30-ம் தேதி பீடித் தொழிலாளர்கள் கோஷ்டி கோஷ்டியாக ளாக உண்ணுவிரதம் இருந்தனர்.

### நள்ளிரவில் கைது

குடியாத்தத்தில் ஜுலை 1-ம் தேதி நள்ளிரவில் தொழர்கள் ஏ கமால் (பீடி தொ. ச. தலைவர்), ஆர். பரமசிவம் (செயலாளர்) கே. கே. ரத்னம் (கம்யூனிஸ்ங் கட்சி) பூ. கோவிந்தராஜ் (கம்யூனிஸ்ட் கட்சி), எம். மோதின், ஸ்ரீராம், கே. ராமலிங்கம், கே. கோவிந்தன், எம். என். சுப்பிரமணி, எம். அன்பழகன் ஆகியோர் கைது செய்யப்பட்டனர்.

கைது செய்யப்பட்டவர்களை எல்லாம் உடனடியாக விடுதலை செய்யக் கோருகிறோம்.

—:-—

## கோவையில் டாங்கே கட்சி அடியோடு சரிவு

டி. பி. எப், டெக்ஸ்டைல்மில் ஜுன் 24-ல் கூட்டுறவு பாங்கு, தேர்தலில் டாங்கே கட்சி முதலில் 4 பேரை நிறுத்தியும் ஸ்டோருக்கு நடந்த தேர்தலில் ஒருவரை நிறுத்தியும் தோல்விக்குப் பயந்து போட்டியினின்று வாபஸ் வாங்கிக் கொண்டனர். இந்த 5 ஸ்தானங்களிலும் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த கம்யூனிஸ்ட் அபேட்சகர்கள் வெற்றி கொடி நாட்டினர்.

ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்ட தோழர்கள் பெயர்கள் வருமாறு :-

பாங்கிற்கு : (1) எஸ். ஷண்முகம் (2) ஏ. என் ராமகிருஷ்ணன் (3) வேலுசாமி (4) எம். மாரியப்பன்,

ஸ்டோருக்கு :- தோழர் ஜி. குருசாமி சென்ற தடவை கணிசமான ஸ்தானங்கள் வைத்திருந்த டாங்கே கட்சி இப்போது கோட்டை விட்டு விட்டது குறிப்பிடத்தக்கது

### சி. எஸ் அண்ட் டபுள்யூ மில்

கூட்டுறவு பாங்குக்கு ஜுன் 30-ல் நடைபெற்ற தேர்தலில் கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்க அபேட்சகர் அத்தனை பேரும் வெற்றி பெற்றனர், டாங்கே கட்சி அபேட்சகர்கள் அனைவரும் மண்ணைக் கவ்வினர்.

வெற்றி பெற்ற தோழர்கள் கிடைத்த வாக்குகளும் வருமாறு :-

(1) முத்து (758 வாக்குகள்) (2) ராமசாமி (765) (3) வாசுதேவன் (762), (4) கிருஷ்ணன் (742), (5) அய்யாவு (715) (6) சிலுவை முத்து (698)

போட்டியிட்ட டாங்கே கட்சி அபேட்சகர்கள் 6- பேரும் படுதோல்வி அடைந்தனர். சமீபத்தில் ஸ்டோருக்கு நடைபெற்ற தேர்தலில் கம்யூனிஸ்ட் கட்சிக்குக் கிடைத்த வாக்குகளை விட இத் தேர்தலில் அதிக வாக்குகள் கிடைத்துள்ளது, டாங்கே கட்சிக்கு வாக்குகள் மேலும் குறைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

### வாழ்க மணக்கள்

மாஸ்கோட்டை நத்தம் கிராமம் பாலையா - புட்பவல்லி திருமண நன்கொடை ரூ 2.

### தோழர் கிருஷ்ணனுக்கு அறுவை சிகிச்சை வைத்திய செலவுக்கு நிதியளிப்பீர்

கடலூர் சிறையில் சரியான வைத்திய வசதி அளிக்காமல் தோழர் எஸ். கிருஷ்ணனின் ஆரோக்கியம்குன்றி இப்போது அவர் பரோலில் வந்திருக்கிறார்.

கோவை பிரைவேட் நர்சிங் ஹோமில் அவருக்கு குடல் ஆபிரேஷன் செய்யப்படவிருக்கிறது. அவரது வைத்தியச் செலவுக்கு நிதி உதவி அளிப்பது ஒவ்வொருவருடைய கடமையாகும். பணம் அனுப்ப வேண்டிய விலாசம் :

தோழர் ஆர். வெங்கிட்டு
செயலாளர்
கோவை ஜில்லா
ஜெனரல் என்ஜினிரிங், மெக்கானிக்கல் யூனியன்
கணபதி, கோவை-6,

∴

### நன்றி
### தீக்கதிருக்கு நன்கொடை

வேடசந்தூர் தோழர் பி. பொன்னையா ரூ 2, கே. புவனேசன் 1, வி. கே. ரஹ்மான் 1, எம். கே. கண்ணன் 1, எம். மாணிக்கம் 1, ஏ. சாமிநாதன் 1 தேவ செட்டி 1, கண்கொடுத்த வனிதம் ம. சண்முகம் 1.50 மேட்டூர் அணை முருகேசன் மூலம் 6

∴

### அறிவிப்பு

நன்கொடை, லெவி முதலியன வசூலிப்பதற்கான ரசீது புத்தகங்கள் அச்சில் இருக்கின்றன. அது கிடைக்கும் வரை ஜில்லா கமிட்டிகள் சொந்த ரசீது புத்தங்களை உபயோகிக்கலாம்

வி. சங்கரநாராயணன்
செயலாளர்
தமிழ் மாநிலக் கமிட்டி
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

---

(முதல் பக்கத் தொடர்ச்சி)

சத்திய பிரியா ராய், அனிலா தேவி உள்ளிட்ட வங்க மாநில ஆசிரியர்கள் சங்கத்தலைவர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டனர்

மக்களின் எல்லா, பகுதியனரும் நடத்தும் கூட்டங்களையும், ஆர்ப்பாட்டங்களையும் பொருட்படுத்தாமல் சர்க்கார் தொடர்ந்து ஜனநாயக இயக்கத்தின் தலைவர்களையும் ஊழியர்களையும் சிறையில் வைத்திருக்குமானால் கோரிக்கையை வலுப்படுத்த நாங்கள் சட்ட மறுப்பு, சிறை புகுதல் முதலிய நேரடியான நடவடிக்கைகளில் இறங்க வேண்டி நேரிடும் என்று ஜோதி பாசு எச்சரிக்கை விடுத்தார்.

ஊர்வலத்தில் பதாகைகளும் செங் கொடிகளும் பட்டொளி வீசி பறந்தன.

சிறை சாலையை நோக்கிச் சென்ற 10 ஆயிரம் பேர் கொண்ட ஊர்வலத்தில் மேலும் 3- ஊர்வலங்கள் வந்துசேர்ந்து கல்கத்தா நகர மெகிடுகிடுத்தது. ஊர்வலத்தினர் எழுப்பிய கோஷங்களை கல்கத்தா நகரமே எதிரொலித்தது.

### சிறைக்குள்ளும் கோஷங்கள்

ஊர்வலம் சிறை வாயலை நெருங்கியதும் சிறையிலிருந்த பாதுகாப்புக் கைதிகள் கோஷங்கள் எழுப்பி ஊர்வலத்தினரை வரவேற்றதை நன்கு கேட்க முடிந்தது. இந்த உணர்ச்சிப் பெருக்கெடுக்கும் வேளையில் சிறை மேல் மாடி ஜன்னல்கள் வழியாக தீப்பந்தங்களைக் காட்டி பாதுகாப்புக் கைதிகள் வாழ்த்து தெரிவித்தார்கள்,

ஜோதிபாசுவின் சொற்களை சுவர்கள் தடுத்தாலும் இரு பக்கங்களிலிருந்தவர்களின் இதயங்கள் பேசிக்கொண்டன. "தோழர்களே நீங்கள் தனிமையில் இருக்கவில்லை. நீங்கள் விடுதலை பெற்று திரும்ப எங்களிடம் வந்து சேரும்வரை எங்கள் போராட்டம் ஓயாது" என்று தோழர் ஜோதிபாசு அறிவித்த போது அந்த உறுதியை சிறைக்குள் இருந்தவர்கள் நன்கு உணர்ந்தார்கள்.

---

### சேலத்தில் ஈ. எம். எஸ். பேசுகிறார்
### 27-7-65 ஞாயிறு மாலை 6-மணிக்கு

அன்று மாலை 4மணிக்கு மாபெரும் ஊர்வலம் புறப்படும்,

---

(3-ம் பக்கத் தொடர்ச்சி) ;

கட்சியின் பெரும் பகுதி சீராகவும், செம்மையாகவும், வலிமையோடும் இருப்பதை நிரூபிக்கிறது. இது நமக்கு விலைமதிக்க முடியாத பொக்கிஷமாகும்.

முதலாளி வர்க்க ஏஜன்ட் டாங்கேயிட மிருந்தும் அவருடைய திரிபுவாதக் கோஷ்டியிடமிருந்தும் விடு பட்டு நாம் திரிபுவாதத்துக்கு எதிரான போராட்டத்தை உறுதியாக நடத்திக் கொண்டு தன்னிச்சைப் போக்கில் விழாமல் காத்துக் கொண்டு மார்க்ஸிஸம்-லெனினிஸக் கொள்கைகளைக் கற்று கிரகித்து அனுஷ்டித்துக் கொண்டு லெனிசை ஸ்தாபனக் கோட்பாடுகளில் அமைந்து கொண்டு சமூக மாற்றத்துக்கு ஒரே வன்மையான ஆயுதமாக உண்மையான, மக்களுடைய கம்யூனிஸ்ட் கட்சியை வளர்ப்போமாக! எதிர் காலம் நமக்குத் தான் மார்க்ஸிஸம்- லெனினிஸத்தில் அமைந்த உண்மையான மக்களுடைய கம்யூனிஸ்ட் கட்சியை அமைக்க முன்னேறுவோம்!

ஜனநாயக முன்னணியை அமைக்க முன்னேறுவோம்!

மார்க்ஸிஸ லெனினிஸ பட்டாளிவர்க்க சர்வதேசியம் நீடூழி வாழ்க!

Edited by Sri N. Sankaraiah and Published by Sri M.N. Ravunni, at153, Dr. Natesan Road, Triplicane, Madras-5
Printed by : Smt M. Subhadra at Times Press, 153 Dr. Natesan Road, Madras-5